# இரண்டாம் மொழி
# தமிழ்

## தரம்

## 9

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே.



**''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம் நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''**

**கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி**

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில் வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான பல்வேறு மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்காலச் சவால்களை வெற்றிகொள்ளுவதற்கு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை ஒழுங்காகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்த சகோதரர்களின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே அரசினால் இலவசப் பாடநூல்களை உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

உலகில் மிக வேகமாக மாறி வரும் சுற்றுச்சூழல் மாற்றத்திற்கு பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதற்கும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதற்கும் ஓர் அரசாக நாம் செயற்படுவது, ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாக புரிந்து வைத்துள்ளோம் என்பதனாலேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்துக்கொண்டு நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியது அதனாலேயே ஆகும். இதற்காக இந்நூலைப் பயன்படுத்துவதன் மூலம் நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகவும் கூடிய நிதித்தொகைக்கு, பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் என்பனவே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் மிகவும் கூடிய பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளில் கூட இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என, கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

# முன்னுரை

இந்து சமுத்திரத்தின் நித்திலம் எனப் போற்றப்படக்கூடிய ஒரு நாட்டில் நீங்கள் பிறந்திருக்கின்றீர்கள். உங்கள் நாடு சிறியதாயினும் அது பெறுமதிமிக்க ஒன்றாகும். இவ்வாறான நாடொன்றில் பிறந்திருக்கும் நீங்கள் உண்மையிலேயே அதிஷ்டசாலிகள். நீங்கள் நன்கு கற்று புத்திக்கூர்மையும் குணநலமும் சக்தியுமிக்க வெற்றிபெற்ற ஒரு பிரஜையாகி இந்நாட்டின் மதிப்பை மேலும் உயர்த்துவதைக் காண்பதே எமது ஒரே எதிர்பார்ப்பாகும். அவ்வெதிர்பார்ப்பை அடைந்து கொள்ளுவதற்கு, கல்வி தொடர்பான சகல வசதிகளையும் இலவசமாக வழங்குவதற்கு, அரசு நடவடிக்கை மேற்கொள்கின்றது. அதன் ஒரு திட்டமாகவே இந்நூல் உங்களுக்கு வழங்கப்படுகின்றது.

புதிய பாடத்திட்டத்திற்கிணங்க 2016 ஆம் ஆண்டு தரம் 1 இற்கும் 2017 ஆம் ஆண்டு தரம் 2 இற்கும் புதிய பாடநூல்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. இதன் தொடராக 2018 ஆம் ஆண்டு தரம் 3 இற்குப் புதிய பாடநூல்களை வழங்குவதற்குக் கல்வி வெளியீட்டுத் திணைக்களம் நடவடிக்கை மேற்கொண்டுள்ளது.

இந்நூலை உங்களுக்குப் பெற்றுக்கொடுப்பதில் ஒத்துழைப்பு வழங்கிய எழுத்தாளர்கள் மற்றும் பதிப்பாசிரியர்கள் உட்பட அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றிகள் உரித்தாகட்டும். இந்நூலை உங்கள் கைகளில் கிடைக்கச் செய்வதில் செயற்பட்ட கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கு நன்றி தெரிவிப்பதற்கும் இதனை ஒரு சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொள்கின்றேன். இந்நூலினால் மிக உயர்ந்த பயனைப்பெற்று அதிலுள்ள விடயங்களை உங்கள் வாழ்வில் எடுத்து நடப்பதைக் காண்பதே நூலாக்கத்திற்குப் பங்களிப்புச் செய்த அனைவரினதும் எனதும் விருப்பம் என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகின்றேன்.

**ஐ.எம்.கே.பீ. இலங்கசிங்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2017. 05. 02

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**திரு. ஐ.எம்.கே.பீ. இலங்கசிங்க**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**திருமதி டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**

ஆணையாளர் (அபிவிருத்தி)

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**திரு. சி. காண்டீபன்**

அபிவிருத்தி அலுவலர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## பதிப்பாசிரியர் குழு

**கலாநிதி உ. நவரட்ணம்**

சிரேஷ்ட பாட நிபுணத்துவர் - GIZ

தேசிய கல்வி நிறுவகம் - மகரகம.

**கலாநிதி ஸ்ரீ. பிரசாந்தன்**

முதுநிலை விரிவுரையாளர்

பேராதனைப் பல்கலைக்கழகம்.

**திரு. என். ஏ. தம்மிக்க ஜயசிங்க**

முதுநிலை விரிவுரையாளர் - சிங்களத்துறை

றுஹுணைப் பல்கலைக்கழகம்.

**திரு. றகித்த கருணாரத்ன**

தலைவர் - மொழித்துறை

கோத்தே நிறுவகம்.

**திரு. சி. காண்டீபன்**

அபிவிருத்தி அலுவலர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**திரு. மு. தயாநிதி**

விரிவுரையாளர்

தமிழ்மொழிப் பிரிவு - தேசிய கல்வி நிறுவகம்.

## நூலாக்கக் குழு

**திருமதி.கே. பாலறஞ்ஜனி**

ஆசிரியர்

புனித கிளேயார் மகளிர் வித்தியாலயம்

கொழும்பு - 6.

**திரு. எஸ். வடிவேல்**

ஆசிரியர்

கொ/சாந்த ஜோன் வித்தியாலயம்

தெமட்டகொடை

கொழும்பு - 9.

**திருமதி. எஸ். பீ. தொடங்வெல**

விரிவுரையாளர்

அழகியல் ஆசிரியர் கல்லூரி

கிராகம

பிலிமத்தலாவை.

**திரு. ஆர். தமிழ் செல்வம் பிள்ளை**

பாட இணைப்பாளர் (இரண்டாம்மொழி)

வலயக் கல்விக் காரியாலயம்

மாத்தளை.

**திரு. கே. சிவராஜ்**

ஆசிரியர்

ம.மா/மடுள்ள இடைநிலைப் பாடசாலை

வலப்பனை.

**ஜனாப். எம்.எச்.எம்.ஜௌபர்**

விரிவுரையாளர்

கொட்டகலை ஆசிரியர் கலாசாலை

கொட்டகலை.

**பதிப்பாசிரியர் - மொழி**

**திரு. ஆர். ஜோன்ஸ்ரன் கெரால்ட்**

ஆசிரியர்

இராமநாதன் மகளிர் கல்லூரி

கொழும்பு - 4.

**ரஷீத் எம். றியால்**

ஆசிரிய ஆலோசகர் (இரண்டாம்மொழி)

வலயக் கல்விக் காரியாலயம்

கண்டி.

## சரவை நோக்கு

**ஜனாப் எம். எம். மஃஸூர்**

பிரதி அதிபர்

கொ/அல்-ஹிக்மா கல்லூரி

கொழும்பு - 12.

## சித்திரம்

**திரு. கே. எ. சமன் களுபோவில**

மேல் / கம்பஹா அனுர மத்திய ம.வி

யக்கல.

## முகப்பு வடிவமைப்பு

**திரு. சத்திவேல் சத்தியசீலன்**

கணினி உதவியாளர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## சித்திரங்கள்

**திரு. கே. எ. சமன் கலுபோவில**

மேல் / கம்பஹா அனுர மத்திய ம.வி

யக்கல.

## நூல் வடிவமைப்பு

**திரு. சத்திவேல் சத்தியசீலன்**

கணினி உதவியாளர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**திரு. நடேஷன் துஷாந்தன்**

கணினி உதவியாளர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

# உள்ளடக்கம்

# 1 சேவலும் இரத்தினக் கல்லும்

## செயற்பாடு - 1

**படத்தை அவதானிப்போம், கலந்துரையாடுவோம்.**










1. இது போன்ற படங்களை எங்கு கண்டிருக்கிறீர்கள்?

_______________________________

2. உங்களுக்கு இது போன்ற கதைகள் வாசிக்க விருப்பமா?

________________________________

3. இது போன்ற எத்தனை கதைகள் வாசித்து இருக்கிறீர்கள்?

________________________________

4. அவற்றுள் உங்களுக்கு விருப்பமான கதை எது?

________________________________

## 1 செயற்பாடு - 2

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம்.**

### தமிழில் சித்திரக்கதை

குழந்தைகளின் உலகம் கதைகளினால் ஆனது. ''கதை சொல்லப்போகிறேன்'' என்றால் ... உடனே உற்சாகத்துடன் குழந்தைகள் எம் அருகே ஓடிவந்து விடுகிறார்கள். அவர்களுக்குக் கதைகள் கேட்கப் பிடிக்கும்; கதைகள் வாசிக்கப் பிடிக்கும். அதைவிடப் படங்களுடன் கதைகள் வாசிக்க மிகவும் பிடிக்கும். குழந்தைகளைக் கவர்வன சித்திரங்கள். 1956 இல் ஆனந்த விகடனில் வெளிவந்த ''ஜெமிந்தார் மகன்'' தமிழில் வெளிவந்த முதல் சித்திரக்கதை ஆகும்.

1970 முதல் 1990 இன் முற்பகுதி வரையிலான காலம் ''சித்திரக்கதைகளின் பொற்காலம்'' எனப்படுகிறது. இக் காலத்தில் பல சித்திரக்கதைச் சஞ்சிகைகள் வெளிவந்தன. அவை லயன் காமிக்ஸ், ராணி காமிக்ஸ், வாண்டுமாமா சித்திரக்கதை, அம்புலிமாமா, பாலமித்திரா என்பனவாகும். தற்போது தொலைக்காட்சி, கணினி என்பவற்றின் வருகை காரணமாகச் சித்திரக்கதை வாசிப்புப் பழக்கம் குறைந்து வருகிறது.

## செயற்பாடு - 3

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம், கீழ்வரும் வினாக்களுக்கு விடை எழுதுவோம்.**

1. குழந்தைகளின் உலகம் எதனால் ஆனது?

2. தமிழில் வெளிவந்த முதல் சித்திரக்கதை எது?

3. அது எதில் வெளிவந்தது?

4. தமிழ்ச் சித்திரக் கதையின் பொற்காலம் எது?

5. தமிழில் வெளிவந்த சித்திரக்கதைச் சஞ்சிகைகள் இரண்டு தருக.

# செயற்பாடு - 4

**கதையைப் பாத்திரமேற்று வாசிப்போம்.**







ஆ இது
என்ன ?


அப்பா ! அப்பா! இது என்ன நல்ல ருசியான
சாப்பாடா? எனக்குத் தாருங்கள் எனக்குத் தாருங்கள்.


சீச்சீ இது என்ன?
சாப்பிட முடியவில்லை அப்பா.


ம் ... இதைச்
சாப்பிட முடியாது. இது ஒரு
இரத்தினக்கல்.


அப்படியா
அப்பா?


இது இரத்தினக்கல் வியாபாரிக்குக் கிடைத்திருந்தால் பிரயோசனப்பட்டு இருக்கும். இதன் மதிப்பு தெரிந்திருக்கும்.


இதை விட, தானியங்கள் கிடைத்திருந்தால்
எனக்கு மகிழ்ச்சியாக இருந்திருக்கும். உனக்கும் தந்திருப்பேன்.
எங்கள் வயிறும் நிறைந்திருக்கும்.


என்ன
செய்வது
அப்பா?

## சொல் அறிமுகம்

| | | |
|---|---|---|
| குழந்தைகளின் | - | දරුවන්ගේ |
| உலகம் | - | ලෝකය |
| உற்சாகத்துடன் | - | උනන්දුවෙන් |
| அருகே | - | ළඟින් |
| கவர்வன | - | සිත් ඇදගන්නා |
| வெளிவந்த | - | නිකුත් වූ |
| பொற்காலம் | - | ස්වර්ණමය යුගය |
| சித்திரக்கதை | - | චිත්‍ර කතාව |
| குறைந்து | - | අඩුවෙමින් |

## செயற்பாடு - 5

**கதையை வாசிப்போம், சரியாயின் "✓" எனவும் பிழையாயின் "✗" எனவும் அடையாளம் இடுவோம்.**

1. கோழிக் குஞ்சு குப்பையைக் கிளறியது.
2. சேவலுக்கு மாணிக்கக்கல் ஒன்று கிடைத்தது.
3. சேவலுக்குத் தானியம் கிடைத்தது.
4. இரத்தினக்கல் கிடைத்ததால் சேவல் மகிழ்ந்தது.

## செயற்பாடு - 6

**அட்டவணையை அவதானிப்போம், இடைவெளி நிரப்புவோம்.**

| | | |
|---|---|---|
| அ (ந்த்) | திற + ந்த் + அது<br>பற ________<br>நட ________ | திறந்தது<br>________<br>________ |
| இ (த்த்) | பொரி + த்து + அது<br>தவி ________<br>கடி ________ | பொரித்தது<br>________<br>________ |
| ஐ (த்த்) | கிடை + த்த் + அது<br>கதை ________<br>சமை ________ | கிடைத்தது<br>________<br>________ |

| | | |
|---|---|---|
| உ (இ) | ஓடு (உ்) + இ + அது<br>கிளறு (உ்) + இ + அது<br>தேடு (உ்) ________ | ஓடியது<br>________<br>________ |
| உ (ட்ட்) | போ (டு) + ட்ட் + அது<br>சாப்பி (டு) + ட்ட் + அது | போட்டது<br>________ |
| உ (ந்த்) | விழு + ந்த் + அது<br>இரு ________ | விழுந்தது<br>________ |

**வாசிப்போம், பயிற்சி பெறுவோம், இடைவெளி நிரப்புவோம்.**

| | | |
|---|---|---|
| (ஆ) | வ(ா) + ந்த் + அது | வந்தது |
| (ஆ) | த(ா) + ந்த் + அது | ______ |
| (ஆ) | கொண்டுவ(ா) + ந்த் + அது | ______ |
| (ஓ) | போ + ன் + அது | போனது |

## செயற்பாடு - 7

**படம் பார்ப்போம், வாசிப்போம், இடைவெளி நிரப்புவோம்.**

1



சேவல் ஒன்று குப்பையைக் ______ (கிளறு) உணவு ______ (தேடு)

2



அப்பொழுது அங்கே இரத்தினக்கல் ஒன்றைக் ______ (காண்)

3



அதைக்கண்ட குஞ்சு ஆவலுடன் அங்கு ______ (வா)

4 

குஞ்சு இரத்தினக்கல்லை கொத்திக் கொத்திப் ______________ (பார்)

5 

அதை உண்ண முடியவில்லை. கவலையுடன் சேவலைப் ______________ (பார்)

6 

இது எமக்கு கிடைத்து என்ன பயன் எனக் கவலையுடன் ______________ (கூறு)

7 

இரத்தினக்கல்லுக்குப் பதிலாகத் தானியம் கிடைத்திருந்தால் வயிறு நிறைந்து மகிழ்ச்சியாக இருந்திருப்பேன் என ______________ (நினை)

## செயற்பாடு - 8

**பொருத்தமான எழுத்தை வைத்து இடைவெளி நிரப்புவோம். சிங்களச் சொல்லுடன் இணைப்போம்.**

| | |
|---|---|
| 1. சே___ல் | පැටියා |
| 2. கு ___ பை | කුකුළා |
| 3. ஆவ ___ | වටිනා |
| 4. இ ___ த்தி ___ க்கல் | කුණු / කසළ |
| 5. கு ___ சு | ආශාව |
| 6. வ ___ று | මැණික් ගල |
| 7. வி ___ மதிப்ப ___ ற | ධාන්‍ය |
| 8. க ___ லை | බඩ |
| 9. தா ___ ய ___ | දුක |
| 10. ம ___ ___ ச்சி | සතුට |

## செயற்பாடு - 9

**(அ) குழுக்களாக இணைவோம், விரும்பிய சொற்கூட்டத்தினைத் தெரிவு செய்வோம்.**

**(அ) சித்திரக் கதை ஒன்றை எழுதுவோம், வகுப்பறையில் காட்சிப்படுத்துவோம்.**

தொகுதி 1

| | |
|---|---|
| தாய்க்கோழி | தனியாக |
| பருந்து | கேட்கவில்லை |
| குஞ்சு | சென்றது |
| ஓடியது | தூரச் |
| பறந்து | |

தொகுதி 2

| | |
|---|---|
| புறா | கரையேறியது |
| பறந்தது | வேடன் |
| மரத்தில் | தவித்து |
| எறும்பு | இலையில் |

தொகுதி 3

| | |
|---|---|
| முயல் | போட்டி |
| ஆமை | வெற்றி |
| நித்திரை | திரும்பிய |
| வேகமாக | பார்த்தது |
| மெதுவாக | |



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



2

| ல | ழ | ள |
|---|---|---|
| உலகம் | தமிழ் | வெளிவந்தது |
| காலம் | குழந்தை | கிளறியது |
| நல்ல | கோழி | |
| சேவல் | மகிழ்ச்சி | |
| கல் | விழுந்தது | |



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. දෙමළ චිත්‍ර කතා ඉතිහාසය පිළිබඳව දැන ගැනීම | | | |
| 2. දෙමළ චිත්‍ර කතාවක් කියවා තේරුම් ගැනීම | | | |
| 3. දෙමළ භාෂාවේ කථන හා ලිඛිත බස හඳුනා ගැනීම | | | |
| 4. අතීත කාල ක්‍රියාපද හඳුනාගෙන භාවිත කිරීම | | | |
| 5. චිත්‍ර කතාවක් නිර්මාණය කිරීම | | | |
| 6. ல,ழ,ள අක්ෂරවල උච්චාරණ හඳුනා ගැනීම හා නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 2 அந்தரேயும் தென்னங் கன்றும்

## செயற்பாடு - 1

**படத்தைப் பார்ப்போம், கலந்துரையாடுவோம், கதையை ஊகிப்போம், வகுப்பறையில் முன்வைப்போம்.**







## செயற்பாடு - 2

**படத்துக்குப் பொருத்தமான வாக்கியங்களை ஒழுங்குப்படுத்தி எழுதுவோம், பொருத்தமான கூட்டினுள் இலக்கத்தை இடுவோம்.**

1. பார்க்கிறார் / கோபத்துடன் / அரசர்ஞ

______________________________

2. தூங்குகிறார் / ஒருவர் / நன்றாகத்

______________________________

3. ஓடுகின்றார் / ஒருவர் / தீபத்துடன்

______________________________

## செயற்பாடு - 3

**படங்களை அவதானிப்போம், பந்திகளை வாசிப்போம், படத்திற்குப் பொருத்தமான பந்தியைத் தெரிவு செய்து அதன் இலக்கத்தை கூட்டினுள் இடுவோம்.**











முன்னொரு காலத்தில் அரசருக்குச் சொந்தமான பல தென்னந் தோப்புக்கள் இருந்தன. அங்கு இருந்த தென்னை மரங்களுக்கு வயதாகி விட்டது. புதிய தென்னங்கன்றுகள் நடவேண்டும் என அரசர் ஆணையிட்டார். தென்னங்

1 கன்றுகள் நடப்பட்டன. நட்ட தென்னங் கன்றுகளுக்கு நீர் ஊற்றவும் அவற்றைப் பாதுகாக்கவும் ஒரு காவலாளி இருந்தார். அவர் அதை நன்கு பராமரித்து வந்தார்.

ஒரு நாள் காவலாளிக்கு அவசரமாக விடுமுறை தேவைப்பட்டது. அவர் அரசரிடம் அனுமதி பெற்று, சில நாட்கள் விடுமுறை எடுத்தார். அரசர் உடனே அந்தரேயை அரண்மனைக்கு வரும்படி தகவல் அனுப்பினார். ''அந்தரே! எமது தென்னந் தோட்ட காவலாளியின் தாயார் இறந்துவிட்

2 டார். அதனால் அவர் அவசரமாக ஊருக்குச் சென்றுவிட்டார். எமது தென்னந் தோப்பில் புதிய தென்னங்கன்றுகள் நடப்பட்டுள்ளன. அவற்றைக் காவலாளி வரும்வரை பார்த்துக் கொள்ள வேண்டும். தினமும் தண்ணீர் ஊற்றி நன்கு பராமரிக்க வேண்டும். இந்த அரச சேவையை நீ செய்ய வேண்டும்.'' என அரசர் அந்தரேயிடம் கூறினார்.

அந்தரேயிக்கு இந்த வேலையில் பெரிதாக விருப்பம் இல்லை. ஆனால் அரசரின் ஆணையை மீற முடியாது. இதனால் அந்தரே தென்னந் தோட்டத்திற்கு விருப்பம் இல்லாமல் அரை மனதுடன் சென்றார். பகற்பொழுது ஒருவாறாகக் கழிந்து விடும். இரவு என்ன செய்வது? இந்தப்
3 பெரிய தென்னந் தோப்பில் எவ்வாறு இரவைக் கழிப்பது என்று யோசித்தார். அப்பொழுது அந்தரேக்கு நல்லதோர் உபாயம் தோன்றியது. அதன்படி இரவு மெதுவாக வீட்டுக்குச் சென்று விடுவார்.

விடுமுறையில் சென்ற காவலாளி திரும்பிவரத் தாமதமானது. அந்தரேயின் வேலை நீடித்தது. சில நாட்களின் பின் அரசர் தோட்டத்திற்குச் சென்றார். அந்தரே தென்னை மரத்தின் அடியில் நல்ல நித்திரை. புதிதாக
4 நடப்பட்ட தென்னங்கன்றுகள் சில இறந்து கிடந்தன. சில கன்றுகள் வாடி இருந்தன. ‘‘அந்தரே! புதிதாக நட்ட தென்னங்கன்றுகள் எல்லாம் வாடியும் இறந்தும் உள்ளன. என்ன நடந்தது?’’ என்று மன்னர் கோபமாகக் கேட்டார். ‘‘மன்னரே! நான் காலையில் தென்னங்கன்றுகளுக்கு நீர் இறைத்து நன்றாகப் பராமரித்தேன்.

இரவு வேளை நான் இங்கே எவ்வாறு தனியே இருப்பது? அதனால் தென்னங் கன்றுகளைப் பிடுங்கி காவலாளியின் அறைக்குள் வைத்துக் கதவை மூடிவிட்டுச் சென்றேன். பின்னர் காலையில் வந்து மீண்டும் நட்டு நீர் ஊற்றினேன். அவை ஏன் இறந்தன என எனக்குத் தெரியாது என்று அமைதியாகப் பதில் கூறினான். ‘‘எந்த வேலையையும் கொடுக்கும் போது அதற்குப் பொருத்தமானவரிடமே கொடுக்க வேண்டும்’’ என அரசர் தனக்குத் தானே கூறிக்கொண்டார்.

## சொல் அறிமுகம்

| | |
|---|---|
| தென்னங்கன்று | - පොල් පැළය |
| காவலாளி | - මුරකරුවා |
| ஆணையிட்டார் | - අණ කළේ ය |
| அவசரமாக | - හදිසියෙන් ම |
| விடுமுறை | - නිවාඩුව |
| அனுமதி | - අනුමැතිය |
| உபாயம் | - උපාය |
| தாமதமானது | - ප්‍රමාද විය |
| நித்திரை | - නින්ද |
| மன்னர் | - රජතුමා |
| பிடுங்கி | - උගුලා |

## ❸ செயற்பாடு - 4

**ஆசிரியரின் உதவியுடன் கதையை செவிமடுப்போம், சரி "✓" பிழை "×" இடுவோம்.**

1. தென்னங்கன்றுகளுக்கு வயதாகி விட்டன.
2. புதிய மாங்கன்றுகளை நட அரசர் ஆணையிட்டார்.
3. காவலாளி அவசரமாக விடுமுறை எடுத்தார்.
4. அந்தரேயிக்கு இந்த வேலையில் பெரிதாக விருப்பமில்லை.
5. அரச ஆணையை மீற முடியும்.
6. புதிதாக நட்ட தென்னங்கன்றுகள் எல்லாம் இறந்து விட்டன.

## செயற்பாடு - 5

குழுவாக இணைவோம், கதையை வகுப்பறையில் பாத்திரமேற்று நடித்துக் காட்டுவோம்.

## செயற்பாடு - 6

**பொருத்தமான முடிக்கும் சொல்லைத் தெரிவு செய்து இணைப்போம்.**

| | |
|---|---|
| 1. அரசர் | சென்றான் |
| 2. காவலாளி | இறந்தன |
| 3.வேலை | தோன்றியது |
| 4.தென்னங்கன்றுகள் | ஆணையிட்டார் |
| 5. உபாயம் | நீடித்தது |

## செயற்பாடு - 7

**கதையிலுள்ள வினைச் சொற்களை அவதானித்து எழுதுவோம்.**

| | | | |
|---|---|---|---|
| 1. வா | - வந்தனர் | 5. போ | - ____________ |
| 2. எடு | - ____________ | 6. கூறு | - ____________ |
| 3. நட | - ____________ | 7. யோசி | - ____________ |
| 4. சென்று | - ____________ | 8. கேள் | - ____________ |

## செயற்பாடு - 8

**உதாரணத்தை அவதானிப்போம், இடைவெளி நிரப்புவோம்.**

| | | |
|---|---|---|
| நான் | | நடந்தேன் |
| நாங்கள் | | நடந்தோம் |
| நீ | | நடந்தாய் |
| நீங்கள் | | நடந்தீர்கள் |
| அவன் | | நடந்தான் |
| அவள் | நட ⟶ ந்த் | நடந்தாள் |
| அவர் | | நடந்தார் |
| அவர்கள் | | நடந்தார்கள் |
| அது | | நடந்தது |
| அவை | | நடந்தன |

மற ⟶ ந்த்

1. நான் - மறந்தேன்
2. நாங்கள் - ____________
3. நீ - ____________
4. நீங்கள் - ____________
5. அவன் - ____________
6. அவள் - ____________
7. அவர் - ____________
8. அவர்கள் - ____________
9. அது - ____________
10. அவை - ____________

## செயற்பாடு - 9

**உதாரணத்தை அவதானிப்போம், இடைவெளி நிரப்புவோம்.**

| | | |
|---|---|---|
| நான் | | யோசித்தேன் |
| நாங்கள் | | யோசித்தோம் |
| நீ | | யோசித்தாய் |
| நீங்கள் | | யோசித்தீர்கள் |
| அவர் | | யோசித்தார் |
| அவன் | யோசி ⟶ த்த் | யோசித்தான் |
| அவள் | | யோசித்தாள் |
| அவர்கள் | | யோசித்தனர் |
| அது | | யோசித்தது |
| அவை | | யோசித்தன |

படி ⟶ த்த்

1. நான் - படித்தேன்
2. நாங்கள் - ______________
3. நீ - ______________
4. நீங்கள் - ______________
5. அவன் - ______________
6. அவள் - ______________
7. அவர் - ______________
8. அவர்கள் - ______________
9. அது - ______________
10. அவை - ______________

# செயற்பாடு - 10

**உதாரணத்தை அவதானிப்போம், இடைவெளி நிரப்புவோம்.**

| | | |
|---|---|---|
| நான் | | ஆடினேன் |
| நாங்கள் | | ஆடினோம் |
| நீ | | ஆடினாய் |
| நீங்கள் | | ஆடினீர்கள் |
| அவர் | | ஆடினார் |
| அவன் | ஆடு ⟶ இன் | ஆடினான் |
| அவள் | | ஆடினாள் |
| அவர்கள் | | ஆடினார்கள் |
| அது | | ஆடியது |
| அவை | | ஆடின |

கூறு ⟶ இன்

1. நான் - கூறினேன்
2. நாங்கள் - ____________
3. நீ - ____________
4. நீங்கள் - ____________
5. அவன் - ____________
6. அவள் - ____________
7. அவர் - ____________
8. அவர்கள் - ____________
9. அது - ____________
10. அவை - ____________

## செயற்பாடு - 11

**சோடிகளாக இணைவோம், உதாரணத்தை அவதானிப்போம், அட்டவணையைப் பயன்படுத்தி ஒருவர் வினா எழுப்ப மற்றவர் பதில் கூறிப் பேசிப் பழகுவோம்.**

| | |
|---|---|
| என்ன ? | சாப்பிடு, இரு |
| எங்கே ? | வா, குடி |
| எவ்வளவு ? | போ, எழுது |
| எப்படி ? | வாசி, சந்தி |
| யாரோடு ? | எடு, பார் |

**உதாரணம்**

A - நீங்கள் நேற்று என்ன சாப்பிட்டீர்கள் ?

B - நான் நேற்றுச் சோறு சாப்பிட்டேன்.

A - சிவா என்ன வாசித்தான் ?

B - சிவா புத்தகம் வாசித்தான்.

# செவிமடுப்போம் உச்சரிப்போம்





4

| ர | ற |
|---|---|
| அரசருக்கு | கன்றுகள் |
| மரங்களுக்கு | சென்று |
| அவசரமாக | இறந்தான் |
| அரண்மனை | கூறினார் |
| இரவு | |
| நித்திரை | |



## දැන් මට පුළුවන්

| | ✓ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. කතාවක් කියවා රස විඳීම | | | |
| 2. අතීත කාල ක්‍රියාපද හඳුනා ගැනීම හා සුදුසු ලෙස භාවිත කිරීම | | | |
| 3. ர,ற අක්ෂරවල උච්චාරණ වෙනස හඳුනා ගැනීම හා ர,ற යෙදෙන වචනවල තේරුම දැන ගැනීම හා නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 3 யாழ் சந்தை

## 5 செயற்பாடு - 1

**பாடலைச் செவிமடுப்போம், குழுவாகப் பாடுவோம்.**

மாங்காய் தேங்காய் விற்குமிடம்
மலிவாய்க் காய்கறி வாங்குமிடம்
சேலை சட்டை துணி மணிகள்
சிறப்பாய் வாங்கும் சந்தை இது

கீரை கிழங்கு பருப்பு வகை
சீனி சர்க்கரை பனங்கட்டி
மோரும் தயிரும் பல பண்டம்
யாரும் விரும்பி வாங்குமிடம்

1. இப்பாடல் எது பற்றியது ?

## செயற்பாடு - 2

**படத்தை அவதானிப்போம், கீழே உள்ள சொற்களை தொடர்புபடுத்திக் கலந்துரையாடுவோம்.**




1. இடியப்பத்தட்டு  2. குட்டான்  3. நீத்துப் பெட்டி
4. பெட்டி  5. கடகம்  6. பாய்

## 6 செயற்பாடு - 3

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம், வாசிப்போம்.**

✦ வியாபாரி ◆ அம்மா ✖ விஷ்ணு ■ ஜனனி

✦ மலிவு, மலிவு, வாங்கோ அம்மா வாங்கோ.

◆ வாங்கோ பிள்ளைகள். அந்தக் கடைக்குப் போவம்.

✖ அது என்ன ஜனனி?

■ அது பனங்கட்டி.

✖ அது நல்லதா?



✦ நல்லது நல்லது உங்களுக்கு வேணுமா?

✖ ஓம்... ஜனனி.

- பனங்கட்டி என்ன விலை?
- ஒரு குட்டான் நூறு ரூபாய்.
- சரி, ஒரு குட்டான் தாங்கோ.
- அங்கே... கனக்கத் திராட்சைப் பழம் இருக்கு.
- ஓம்... விஷ்ணு. இது யாழ்ப்பாணத் திராட்சை.... உங்களுக்குத் திராட்சை விருப்பமா?
- ஓம்... எனக்கு நல்ல விருப்பம்.... ஆனால் இப்ப வேண்டாம்.
- அம்மா அங்கே லட்டு... வாங்க இல்லையா?
- லட்டு வேண்டாம் பிள்ளை... நான் வீட்டிலை செய்யிறன்.
- உங்களுக்கு லட்டுச் செய்யத் தெரியுமா?
- எனக்குத் தெரியாது. அம்மாவுக்குத் தெரியும்.
- அதோ பனங்கிழங்கு.
- உங்களுக்குப் பனங்கிழங்கு பிடிக்குமா?
- ஓம்... ஜனனி எனக்கும் பிடிக்கும்.

- அம்மா இதையும் வாங்கித்தாங்கோ.
- அது என்ன விலை?
- 80 ரூபாய்.
- சரி தாங்கோ. இந்தாங்கோ நூறு ரூபா.
- நன்றி இந்தாங்கோ மீதி 20 ரூபா.
- பிள்ளைகள், இது போதும் நாங்கள் வீட்டுக்குப் போவம்.

## சொல் அறிமுகம்

| | | |
|---|---|---|
| மலிவு | - | ලාබයි |
| பனங்கட்டி | - | තල් හකුරු |
| கனக்க | - | ගොඩක් |
| விருப்பம் | - | කැමැතියි |
| லட்டு | - | ලඩ්ඩු |
| தெரியுமா | - | දන්නවා ද? |
| பனங்கிழங்கு | - | තල් අල |

## செயற்பாடு - 4

**யாழ் சந்தையில் காணக்கூடிய பனை ஓலைகளால் செய்யப்பட்ட பொருட்களையும், உணவுப் பொருட்களையும் படம் பார்த்து எழுதுவோம்.**

**(சுளகு, பனங்கட்டி குட்டான், பாய், ஒடியல், பனாட்டு, கடகம். நீத்துப் பெட்டி, திராட்சை, பனங்காய்பணியாரம்)**

1



____________________

2



____________________

3



____________________

4



____________________

5



____________________

6



____________________

7



____________________

8



____________________

9



____________________

## 6 செயற்பாடு - 5

**உரையாடலைச் செவிமடுப்போம், சரியான விடையின் கீழ் கோடிடுவோம்.**

1. இவர்கள் எங்கே இருக்கிறார்கள்?
    1. சந்தையில்
    2. கடையில்
    3. வீட்டில்

2. விஷ்ணுக்கு
    1. பனங்கட்டி வேணும்
    2. திராட்சை வேணும்
    3. லட்டு வேணும்

3. அம்மாவுக்கு
    1. லட்டு செய்யத் தெரியும்
    2. லட்டு செய்யத் தெரியாது
    3. பனங்கட்டி செய்யத் தெரியும்

3. பனங்கிழங்கின் விலை
    1. 40 ரூபாய்
    2. 80 ரூபாய்
    3. 90 ரூபாய்

## செயற்பாடு - 6

**உரையாடலை வாசிப்போம், எதிர்மறைச் சொற்களை எழுதுவோம்.**

1. வேண்டும் - வேண்டாம்
2. தெரியும் - ____________
3. முடியும் - ____________
4. விருப்பம் - ____________

## செயற்பாடு - 7

**சோடிகளாக இணைவோம், வினாக்களை வினவுவோம், பேசிப் பழகுவோம்.**

1. உங்களுக்குத் தோசை வேண்டுமா?

______________________________ (வேண்டும் / வேண்டாம்)

2. உங்களுக்குப் பனங்கிழங்கு விருப்பமா?

______________________________ (விருப்பம் / விருப்பமில்லை)

3. உங்களுக்குச் சோறு போதுமா?

______________________________ (போதும் / போதாது)

4. உங்களுக்கு லட்டு செய்யத் தெரியுமா?

______________________________ (தெரியும் / தெரியாது)

## 7 செயற்பாடு - 8

**பின்வரும் இலக்கங்களைச் செவிமடுப்போம், வாசிப்போம்.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 10 | - | பத்து | 60 | - | அறுபது |
| 20 | - | இருபது | 70 | - | எழுபது |
| 30 | - | முப்பது | 80 | - | எண்பது |
| 40 | - | நாற்பது | 90 | - | தொண்ணூறு |
| 50 | - | ஐம்பது | 100 | - | நூறு |

## 8 செயற்பாடு - 9

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம், வாசிப்போம்.**

80 - எண்பது

81 - எண்பது > எண்பத்து + ஒன்று ⟶ எண்பத்தொன்று

82 - எண்பத்து + இரண்டு ⟶ எண்பத்திரண்டு

83 - எண்பத்து + மூன்று ⟶ எண்பத்து மூன்று

84 - எண்பத்து + நான்கு ⟶ எண்பத்து நான்கு

85 - எண்பத்து + ஐந்து ⟶ எண்பத்தைந்து

86 - எண்பத்து + ஆறு ⟶ எண்பத்தாறு

87 - எண்பத்து + ஏழு ⟶ எண்பத்தேழு

88 - எண்பத்து + எட்டு ⟶ எண்பத்தெட்டு

89 - எண்பத்து + ஒன்பது ⟶ எண்பத்தொன்பது

90 - தொண்ணூறு

## 9 செயற்பாடு - 10

**பின்வரும் இலக்கங்களைச் செவிமடுப்போம், உச்சரிப்போம்.**

91 - தொண்ணூற்று + ஒன்று - தொண்ணூற்றொன்று

92 - தொண்ணூற்று + இரண்டு - தொண்ணூற்றிரண்டு

93 - தொண்ணூற்று + மூன்று - தொண்ணூற்று மூன்று

94 - தொண்ணூற்று + நான்கு - தொண்ணூற்று நான்கு

95 - தொண்ணூற்று + ஐந்து - தொண்ணூற்றைந்து

96 - தொண்ணூற்று + ஆறு - தொண்ணூற்றாறு

97 - தொண்ணூற்று + ஏழு - தொண்ணூற்றேழு

98 - தொண்ணூற்று + எட்டு - தொண்ணூற்றெட்டு

99 - தொண்ணூற்று + ஒன்பது - தொண்ணூற்றொன்பது

100 - நூறு

## செயற்பாடு - 11

**பின்வரும் இலக்கங்களைச் சேர்த்து எழுதுவோம்.**

1. 82 = எண்பது + இரண்டு = எண்பத்திரண்டு
2. 93 = தொண்ணூறு + மூன்று ____________________
3. 34 = முப்பது + நான்கு ____________________
4. 68 = அறுபது + எட்டு ____________________
5. 41 = நாற்பது + ஒன்று ____________________

## செயற்பாடு - 12

சோடிகளாக இணைந்து ஒருவர் ஓர் இலக்கத்தைக் கூற மற்றவர் இலக்கத்தை எழுதிக் காட்டுவோம்.

## செயற்பாடு - 13

நீங்கள் சந்தைக்குச் சென்று வாங்க விரும்பும் பொருட்களைக் குறிப்பிடுங்கள்.

## செயற்பாடு - 14

**பின்வரும் உதாரணத்தை அவதானிப்போம், சோடிகளாக இணைந்து உரையாடுவோம்.**

1. உங்களுக்கு என்ன வேண்டும்?

   எனக்கு 500g திராட்சை வேண்டும்.

2. கணக்கு எவ்வளவு?

   100 ரூபா.

3. வேறு எதுவும் தேவையா?

   இல்லை.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



10

| ர | ற |
|---|---|
| திராட்சை | நூறு |
| தெரியும் | சோறு |
| இரண்டு | நன்றி |



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයයි |
| 1. දෙමළ බසින් විමසා භාණ්ඩ මිල දී ගැනීම | | | |
| 2. ඉලක්කම් 80 -100 දෙමළෙන් ගණන් කිරීම | | | |
| 3. வேண்டும், வேண்டாம், தெரியும், முடியும், பிடிக்கும், අර්ථවත් ලෙස භාවිත කිරීම | | | |
| 4. ர,ற අක්ෂරවල උච්චාරණ වෙනස හඳුනා ගැනීම හා ர,ற යෙදෙන වචන නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 4 சித்திரைப் புத்தாண்டு

## (11) செயற்பாடு - 1

**பாடலைச் செவிமடுப்போம், சேர்ந்து பாடுவோம்.**



வந்தது புத்தாண்டு
வாழ்த்தி வரவேற்போம்
அதிகாலை எழுந்தே
மருத்து நீர் வைத்தே
நீராடிப் புத்தாடை
அணிந்திடுவோம் நாமே
பட்டாசு கொழுத்தியே
பட்சணங்கள் உண்டுமே
பாங்காய் ஊஞ்சலாடி
பாலர் நாம் மகிழ்ந்திடுவோம்.

இது போன்ற பாடல்கள் எச்சந்தர்ப்பத்தில் பாடப்படும்?

## செயற்பாடு - 2

**படத்தை அவதானிப்போம், கலந்துரையாடுவோம்.**



## செயற்பாடு - 3

**வாசிப்போம்.**

### சித்திரைப் புத்தாண்டு

பௌத்தர்களும், இந்துக்களும் சேர்ந்து கொண்டாடும் பண்டிகை சித்திரைப் புத்தாண்டு ஆகும். இது சித்திரை மாதம் முதலாம் நாள் கொண்டாடப்படும்.

சித்திரை மாதம் பிறந்து விட்டால், மரம் செடி கொடிகளில் பூக்கள் பூக்கத் தொடங்கும். குயில்கள் இனிமையாகக் கூவும். மக்கள் மனதில் மகிழ்வும் உற்சாகமும் பொங்கி வழியும். புத்தாண்டு தொடங்க முதலே மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று பொருட்கள் வாங்குவார்கள்.

சித்திரைப் புத்தாண்டில் எல்லா விடயங்களிலும் நல்ல நேரம் பார்ப்பார்கள். இந்துக்கள் சித்திரைப் புத்தாண்டு தொடங்கும்போது தலையில் மருத்து நீர் தேய்த்து நீராடுவார்கள். பௌத்தர்கள் சுப நேரம் பார்த்து எண்ணெய் தேய்த்து நீராடுவார்கள். புத்தாடை அணிவார்கள், பெரியோரை வணங்கி ஆசி பெறுவார்கள், கை விசேடம் வழங்குவார்கள், கடவுளை வணங்குவார்கள்.

ஊஞ்சல் ஆட்டம், கயிறு இழுத்தல், சறுக்கு மரம் ஏறுதல், தலையணைச் சண்டை, யானைக்குக் கண் வைத்தல், தேங்காய்

துருவுதல், போர்த் தேங்காய் அடித்தல், முட்டி உடைத்தல், மாட்டு வண்டிச் சவாரி ஆகியன புத்தாண்டு விழாவின் சிறப்பான விளையாட்டுக்கள் ஆகும்.

புத்தாண்டிற்காக இனிப்பு வகைகள் செய்வார்கள். உறவினர்களுக்கும் அயலவர்களுக்கும் பரிமாறுவார்கள். அனைவரும் ஒற்றுமையாகவும் மகிழ்ச்சியாகவும் இவ் விழாவைக் கொண்டாடுவார்கள்.

## சொல் அறிமுகம்

| | | |
|---|---|---|
| கொண்டாடும் | - | සමරන |
| பண்டிகை | - | උත්සවය |
| இனிமையாக | - | මිහිරි ලෙස |
| உற்சாகமும் | - | උනන්දුවත්/උත්සාහයත් |
| இனத்தார் | - | ජාතීන් |
| நீராடுவார்கள் | - | ස්නානය කරති |
| பெற்றோர் | - | දෙමව්පියන් |

| | | |
|---|---|---|
| ஆசிபெறுதல் | - | ආශිර්වාදය ලැබීම |
| கைவிசேடம் | - | ගනුදෙනු කිරීම |
| அயலவர்கள் | - | අසල්වැසියෝ |
| பரிமாறி | - | හුවමාරු කර |

## செயற்பாடு - 4

**பின்வரும் வாக்கியங்கள் சரியாயின் "✓" எனவும் பிழையாயின் "×" எனவும் அடையாளம் இடுவோம்.**

1. கார்த்திகை மாதத்தில் குயில்கள் இனிமையாகக் கூவும்.
2. சித்திரைப் புத்தாண்டு தை மாதம் கொண்டாடப்படும்.
3. பௌத்தர்களும் இந்துக்களும் சித்திரைப் பண்டிகையைக் கொண்டாடுவார்கள்.
4. இந்துக்கள் மருத்து நீர் தேய்த்து நீராடுவார்கள்.

## செயற்பாடு - 5

**பின்வருவனவற்றை வாசிப்போம், படங்களுக்கு பொருத்தமாக இலக்கமிடுவோம்.**

1. மரம், செடி, கொடிகளில் பூக்கள் பூத்து இருத்தல்.
2. குயில்கள் இனிமையாகக் கூவுதல்.
3. மக்கள், கடைக்குச் சென்று பொருட்களை வாங்குதல்.
4. நண்பர்களுக்குப் பரிசுப் பொருட்கள் கொடுத்தல்.
5. கிராமிய விளையாட்டுக்கள் விளையாடுதல்.
6. இனிப்பு வகைகள் செய்தல்.
7. பெற்றோரை வணங்குதல்.
8. தலையில் மருத்து நீர் தேய்த்தல்.
9. ஊஞ்சல் ஆடுதல்.

## செயற்பாடு - 6

**புத்தாண்டுக் கொண்டாட்டத்தில் இந்துக்களும், பௌத்தர்களும் செய்யும் பொதுவான செயற்பாடுகளைப் பட்டியல்படுத்துவோம்.**

1. ______________________________

2. ______________________________

3. ______________________________

4. ______________________________

5. ______________________________

12 *செயற்பாடு - 7*

## புத்தாண்டுக் கொண்டாட்ட நேர்முக வர்ணனை

**பின்வரும் நேர்முக வர்ணனையை வாசிப்போம், செவிமடுப்போம், விடையளிப்போம்.**



புத்தாண்டு விழாவிற்கான விளையாட்டுப் போட்டிகள் தற்போது ஆரம்பமாக உள்ளன. அனைத்து போட்டியாளர்களையும் விளையாட்டு மைதானத்திற்கு வருமாறு அழைக்கின்றோம்.

தற்போது முட்டி உடைத்தல் போட்டி ஆரம்பிக்க உள்ளது.

வயது வேறுபாடு இன்றி, இப் போட்டியில், அனைவரும் பங்கு பெறலாம்.

இதோ! பலர் போட்டி போட்டுக்கொண்டு முன்வந்துள்ளனர். இப்பொழுது, போட்டி ஆரம்பமாகிறது. அதோ! ஒருவருடைய கண்கள் கறுப்புத் துணியால் கட்டப்படுகின்றது.

அவர் போட்டிக்குத் தயாராகிறார்.

முட்டிக்கு அருகில் சென்று தடியை ஓங்குகிறார்.

வெற்றி வாய்ப்பைத் தவறவிடுகிறார்.

இப்பொழுது அடுத்த போட்டியாளர் ஆர்வத்துடன் முன் வருகிறார்.

தனது கால் அடிகளை நிதானத்துடன் வைக்கிறார். கையை ஓங்குகிறார். அவரும் வெற்றியைத் தவற விடுகிறார்.

அதோ... இன்னுமொருவர் உற்சாகத்துடன் வருகிறார். முட்டியை நெருங்குகிறார். முதல் முயற்சியிலே முட்டியை உடைத்து விடுகிறார்.

(பலத்த கரகோஷம் மைதானத்தில் ஒலிக்கிறது.)

# சொல் அறிமுகம்

| | | |
|---|---|---|
| விழாவிற்கான | - | උත්සවය සඳහා |
| தற்போது | - | දැන් |
| அனைத்து | - | සියලු ම |
| போட்டியாளர் | - | තරගකරුවා |
| விளையாட்டு மைதானம் | - | ක්‍රීඩාපිටිය |
| அழைக்கின்றோம் | - | ආරාධනා කර සිටින්නෙමු |
| போட்டி | - | තරගය |
| பங்குபெறும் | - | සහභාගි වන |
| கறுப்புத்துணி | - | කළු රෙදි |
| அருகில் | - | අසල |
| தடியை | - | ලීය |
| ஆர்வத்துடன் | - | උනන්දුවෙන් |

| | | |
|---|---|---|
| நிதானத்துடன் | - | අවධානයෙන් |
| நெருங்குகிறார் | - | ළඟා වෙනවා |
| முதல் முயற்சியில் | - | පළමු උත්සාහයෙන් |
| பலத்த | - | මහත් |
| கரகோஷம் | - | අත්පොළසන් හඬ |
| ஒலிக்கிறது | - | නාද වෙනවා |

## 12 *செயற்பாடு - 8*

**பின்வரும் கூற்றுக்கள் சரியாயின் "✓" எனவும் பிழையாயின் "×" எனவும் அடையாளமிடுவோம்.**

1. இந்த நேர்முக வர்ணனை, விளையாட்டுப் போட்டி பற்றியது.
2. இது கயிறு இழுத்தல் போட்டி பற்றிய வர்ணனை.
3. முட்டி உடைத்தல் போட்டியில் வயது வேறுபாடுகள் இன்றி அனைவருக்கும் பங்கு பெறலாம்.

## செயற்பாடு - 9

**புத்தாண்டு தினத்தில் இடம்பெறும் சில விளையாட்டுக்கள் கீழே உள்ளன. அவற்றை பொருத்தமான படத்தின் கீழ் எழுதுவோம்.**

| | |
|---|---|
| கோலம் போடுதல் | கிளித்தட்டு மறித்தல் |
| மரதன் ஓட்டப் போட்டி | தலையணைச் சண்டை |
| பலூன் உடைத்தல் | பணிஸ் சாப்பிடுதல் |



1. ______________________



2. ______________________



3. ______________________



4. ______________________



5. ______________________



6. ______________________

## செயற்பாடு - 10

உமது பிரதேசத்தில் நடைபெற்ற புத்தாண்டு விழாப்பற்றி ஐந்து வாக்கியம் எழுதுவோம்.

## செயற்பாடு - 11

**பாடத்தில் இடம்பெற்றுள்ள பின்வரும் வாக்கியங்களை அவதானிப்போம், வாசிப்போம்.**

1. பௌத்தர்களும், இந்துக்களும் சேர்ந்து கொண்டாடும் பண்டிகை சித்திரைப் புத்தாண்டு ஆகும்.
2. அனைவரும் ஒற்றுமையாகவும், மகிழ்ச்சியாகவும் இவ் விழாவைக் கொண்டாடுவார்கள்.

**அவதானித்து வாசிப்போம்.**

| | | |
|---|---|---|
| தம்பி<br>பாட்டி | இ - யும் | தம்பியும்<br>பாட்டியும் |
| தங்கை<br>மேசை | ஐ - யும் | தங்கையும்<br>மேசையும் |
| அம்மா<br>அப்பா | ஆ - வும் | அம்மாவும்<br>அப்பாவும் |

| | | |
|---|---|---|
| கண் | | கண்ணும் |
| சொல் | | சொல்லும் |
| கல் | உம் | கல்லும் |
| மண் | | மண்ணும் |
| பெண் | | பெண்ணும் |

| | | |
|---|---|---|
| வாய் | | வாயும் |
| பாய் | | பாயும் |
| வாள் | உம் | வாளும் |
| மான் | | மானும் |
| வான் | | வானும் |
| கால் | | காலும் |

| | | |
|---|---|---|
| நாய் | | நாயும் |
| கல் | உம் | கல்லும் |
| உப்பு | | உப்பும் |
| பருப்பு | | பருப்பும் |

## செயற்பாடு - 12

**பின்வரும் சொற்களுக்கு ‘உம்’ சேர்த்து எழுதுவோம்.**

1. பேனை - பேனையும்
2. கதிரை - ____________
3. மாலினி - ____________
4. அண்ணா - ____________
5. பெண் - ____________

## செயற்பாடு - 13

**பின்வரும் உதாரணத்தை அவதானிப்போம், ‘‘உம்’’ சேர்ப்போம். இடைவெளி நிரப்புவோம்.**

1. சோறு / கறி - சோறும் கறியும்
2. வடை / பாண் - ____________________
3. கை / கால் - ____________________
4. பேனை / பென்சில் - ____________________
5. அவன் / இவள் - ____________________
6. நான் / நீ - ____________________
7. தம்பி / தங்கை - ____________________
8. நாய் / பூனை - ____________________
9. தோசை / சம்பல் - ____________________
10. மேசை / கதிரை - ____________________

# செவிமடுப்போம் உச்சரிப்போம்





13

| ர | ற |
|---|---|
| திராட்சை | பிறந்து |
| தெரியும் | சிறப்பு |
| இரண்டு | பறந்து |
| மரம் | நூறு |
| சித்திரை | சோறு |
| நேரம் | செய்கிறேன் |



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. සිංහල දෙමළ අලුත් අවුරුදු ගැන දෙමළෙන් ලිවීම | | | |
| 2. දෙමළ භාෂාවෙන් කරනු ලබන අවුරුදු ක්‍රීඩා නිවේදනයක් අසා තේරුම් ගැනීම | | | |
| 3. අවුරුදු ක්‍රීඩා හඳුනාගෙන දෙමළෙන් කීම | | | |
| 4. 'உம்' සුදුසු ලෙස භාවිත කිරීම | | | |
| 5. ர,ற අක්ෂරවල උච්චාරණ වෙනස හඳුනා ගැනීම හා නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 5 அம்மா நான் விளையாடப் போறேன்

## செயற்பாடு - 1

**படத்தை அவதானிப்போம், கலந்துரையாடுவோம்.**



## 14 செயற்பாடு - 2

**ஆசிரியரின் உதவியுடன் பாடலைச் செவிமடுப்போம், பாடுவோம்.**

அம்மா நான் விளையாடப் போறேன் - கையில்
அன்புடன் பட்சணம் தந்தனுப் பென்னை
சும்மா நான் உட்கார மாட்டேன் - நல்ல
தோழர் அழைக்கின்றார் நாழிகை ஆச்சு.

பூப்பறித் தாடுவோம் கொஞ்சம் - சாமி
பூசை செய் தாடுவோம் பூ ரதம் கட்டி
வேப்ப மரத்தடி மண்ணில் - சிறு
வீடுகள் கட்டி விருந்துகள் செய்வோம்.

பாட்டுக் கச்சேரிகள் செய்வோம்- நான்
பாடுவேன் மத்தளம் போடுவான் கிட்டு
கேட்டுச் ''சபாஸ்'' எனச் சொல்வார் - பின்பு
கிண்கிணி கட்டி நடனங்கள் செய்வோம்.

வேட்டிகளால் திரை கட்டிப் - பல
வேடங்கள் போட்டொரு நாடக மாடிக்
காட்டுவோம் பாரதக் காட்சி - நான்
கண்ணனின் சொற்படி காண்டீப னாவேன்.

- சுத்தானந்த பாரதியார்

## செயற்பாடு - 3

**செவிமடுப்போம், இடைவெளி நிரப்புவோம்.**

1. அம்மா நான் ____________________ போறேன்.
2. வீடுகள் கட்டி ____________________ செய்வோம்.
3. பாட்டுக் ____________________ செய்வோம்.
4. கிண்கிணி கட்டி ____________________ செய்வோம்.

## சொல் அறிமுகம்

| | | |
|---|---|---|
| விளையாட | - | සෙල්ලම් කිරීමට |
| உட்கார | - | වාඩි වීමට |
| பட்சணம் | - | රසකැවිලි |
| தோழர் | - | මිතුරෝ |
| அழைக்கின்றார் | - | ආරාධනා කරනවා |
| நாழிகை | - | වේලාව |
| பூப்பறித்தல் | - | මල් නෙළීම |
| பூசை | - | පූජාව |
| விருந்து | - | සංග්‍රහය |
| பாடுவேன் | - | ගයමි |

| | | |
|---|---|---|
| வேட்டி | - | වේට්ටිය |
| வேப்ப மரத்தடி | - | කොහොඹ ගහ යට |
| பாட்டுக் கச்சேரி | - | සංගීත සන්දර්ශනය |
| மத்தளம் | - | මද්දලය |
| இரதம் | - | රථය |
| திரை | - | තිරය |
| காட்சி | - | දර්ශනය |
| கண்ணன் | - | ක්‍රිෂ්ණ දෙවිඳුන් |
| சொற்படி | - | පැවසූ ආකාරයට |

## 15 செயற்பாடு - 4

**பாடலைச் செவிமடுப்போம், பொருத்தமான சொற்களைக் கண்டுபிடிப்போம், இணைப்போம்.**

| | |
|---|---|
| 1. பூப்பறித்து | செய்வோம் |
| 2. உட்கார | மாட்டேன் |
| 3. பாட்டுக் கச்சேரிகள் | ஆடுவோம் |
| 4. பூசை | செய்வோம் |
| 5. விருந்துகள் | செய்தாடுவோம் |

## 15 செயற்பாடு - 5

**பாடலைச் செவிமடுப்போம், வாசிப்போம், கற்பனை செய்வோம், வரைவோம்.**

## செயற்பாடு - 6

**பெட்டிக்குள் இருந்து பொருத்தமான சொல்லைத் தெரிந்து எழுதுவோம்.**

1. வீடு - ______________
2. பூ - ______________
3. நாழிகை - ______________
4. உட்காருதல் - ______________
5. பட்சணம் - ______________
6. தோழன் - ______________
7. அம்மா - ______________
8. பறித்தல் - ______________
9. பாட்டு - ______________
10. அழைக்கிறார் - ______________

| |
|---|
| சிற்றுண்டி |
| அன்னை |
| இல்லம் |
| பிடுங்குதல் |
| கூப்பிடுகிறார் |
| நேரம் |
| கீதம் |
| இருத்தல் |
| மலர் |
| நண்பன் |

## செயற்பாடு - 7

**எதிர்கருத்துச் சொற்களை வாசிப்போம்.**

1. சில - பல
2. நல்ல - கெட்ட
3. சிறிய - பெரிய
4. பின்பு - முன்பு

## செயற்பாடு - 8

**பின்வரும் சொற்களை அவதானிப்போம், வாசிப்போம்.**

| | | |
|---|---|---|
| எழுது | | எழுத |
| விளையாடு | | விளையாட |
| சாப்பிடு | | ______ |
| ஓடு | (உ̸) + அ | ______ |
| கும்பிடு | | ______ |
| ஆடு | | ______ |
| எழும்பு | | ______ |
| திரும்பு | | ______ |

**நண்பர்களுடன் இணைந்து பின்வரும் உதாரணத்தை அவதானிப்போம். வாக்கியம் அமைத்து உரையாடுவோம்.**

- நான் விளையாடப் போகிறேன்.
- நான் சாப்பிடப் போகிறேன்.
- ______
- ______
- ______
- ______
- ______
- ______

## செயற்பாடு - 9

**பின்வரும் அட்டவணையை அவதானிப்போம், எழுதுவோம்.**

| | | |
|---|---|---|
| படி<br>குடி<br>சிரி<br>வாசி<br>யோசி    இ | | படிக்க<br>குடிக்க<br>______<br>______<br>______ |
| கதை<br>விதை<br>தை<br>வை<br>உதை    ஐ | க்க | கதைக்க<br>______<br>______<br>______<br>______ |
| நட<br>திற<br>மற<br>பற    அ | | நடக்க<br>______<br>______<br>______ |

**உதாரணத்தை அவதானிப்போம், வாக்கியங்கள் அமைப்போம்.**

உதாரணம் - நான் குடிக்கப் போகிறேன்.

நாங்கள் வாசிக்கப் போகிறோம்.

______________________

______________________

______________________

______________________

______________________

______________________

## செயற்பாடு - 10

**பொருத்தமான சொல்லை வைத்து இடைவெளி நிரப்புவோம்.**

1. நான் ____________ ( விளையாடு) போகிறேன்.

2. நாங்கள் எல்லோரும் ____________ (ஓடு) தொடங்கினோம்.

3. தம்பி புத்தகம் ____________ (வாசி) போகிறார்.

4. எனக்குச் சோறு ____________ (சமை) தெரியாது.

5. அண்ணாவுக்கு வடை ____________ (சாப்பிடு) வேண்டும்.

6. நான் கதிரையில் ____________ (உட்கார்) மாட்டேன்.

7. கதவை ____________ (மூடு) வேண்டாம்.

8. நான் நாளைக்குப் பரீட்சை ____________ (எழுது) போகிறேன்.

9. சிறுவர்கள் பூப் ____________ (பறி) தோட்டத்திற்குப் போகிறார்கள்.

10. ரவி தேநீர் ____________ (குடி) மாட்டான்.

## *செயற்பாடு - 11*

**நீங்கள் ஓய்வுநேரத்தில் என்ன செய்வீர்கள்? தினக்குறிப்பில் எழுதுவோம்.**



## செயற்பாடு - 12

### ஆசிரியருக்கான குறிப்பு

- மாணவர்களை வெளியில் அழைத்துச் செல்லுங்கள்.

- மாணவர்களை வட்டமாக ஓடுமாறு கூறுங்கள்.

- ஆசிரியர்கள் கைத்தட்டும்போது மாணவர் இருவர் சோடிகளாக இணைந்து முதுகுப் புறமாக நிற்குமாறு கூறுங்கள்.

- பின் சோடிகளில் ஒருவர் எதிர்காலத்தில் வினா ஒன்றினை எழுப்ப மற்றவர் விடையளிக்க வேண்டும்.

  உ + ம் - 1. விடுமுறை நாளில் என்ன செய்வீர்கள்?

  2. நான் விளையாடுவேன்.

- மீண்டும் கைத்தட்டும்போது மீண்டும் ஓடுமாறு அல்லது ஆடுமாறு கூறுங்கள்.

- இவ்வாறே வகுப்பில் அனைத்து மாணவர்களையும் விளையாட்டில் ஈடுபடுத்துங்கள்.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



15

| ல | ழ |
|---|---|
| நல்ல | தோழர் |
| கையில் | அழைக்கின்றார். |
| சொல்வார் | நாழிகை |
| பல | எழும்பு |
| சில | |
| மலர் | |



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයයි |
| 1. ගීතය රස විඳීම | | | |
| 2. සමාන පද හඳුනා ගැනීම | | | |
| 3. විරුද්ධ පද හඳුනා ගැනීම | | | |
| 4. පිණිසාර්ථ කෘදන්ත පද හඳුනා ගැනීම සහ භාවිත කිරීම | | | |
| 5. ல,ழ අක්ෂරවල උච්චාරණය හඳුනා ගැනීම හා නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 6 சுவாமி விபுலானந்தர்

16 *செயற்பாடு - 1*

**செவிமடுப்போம், வாசிப்போம்.**

தமிழுக்குத் தொண்டாற்றிய அறிஞர்கள் பலர். அவர்களுள் சுவாமி விபுலானந்தர் முக்கியமானவர். இவர் காரைதீவில் 1892 ஆம் ஆண்டு பிறந்தார். இவரின் தந்தையின் பெயர் சாமித்தம்பி. தாயாரின் பெயர் கண்ணம்மை. இவருக்கு 'மயில்வாகனம்' எனப் பெயர் சூட்டினார்கள்.



சுவாமி விபுலானந்தர்

இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளைக் கற்றார். ஆசிரியராகப் பயிற்சி பெற்றார். விஞ்ஞானமாணிப் பட்டம் பெற்றார். இந்திய மதுரைத் தமிழ்

சங்கம் இவருக்குப் பண்டிதர் பட்டத்தை வழங்கியது. இவர் ஆசிரியராகவும் அதிபராகவும் பணியாற்றினார். இவர் தனது முப்பதாவது வயதில் துறவியானார். சுவாமி விபுலானந்தர் என்னும் திருநாமத்தைப் பெற்றார்.

சுவாமி விபுலானந்தர் இலங்கைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம் என்பவற்றின் முதலாவது தமிழ் பேராசிரியர் ஆவார். இவர் எழுத்து, பேச்சு, கவிதை முதலிய துறைகளில் ஆற்றல் பெற்றவர். இவரது **கங்கையில் விடுத்த ஓலை** என்ற கவிதை நூலும் **யாழ்நூல்** எனும் ஆராய்ச்சி நூலும் **மதங்க சூளாமணி** என்னும் நாடக நூலும் குறிப்பிடத்தக்கவை.

இவர் இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் தொண்டாற்றினார். இவரின் நினைவாகவே கல்வி அமைச்சு தமிழ்த் தினப் போட்டியை நடத்திவருகின்றது.

